2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 11—4—75 வெள்ளி மலர்: 60

## விளைச்சல் பெருகியது கொள்முதல் குறைந்தது இறக்குமதி அதிகரித்தது

புதுடெல்லி, ஏப். 8—

1974—75ல் மொத்த தானிய உற்பத்தி 10 கோடியே 36 லட்சம்டன் 1973—74ல் 9 கோடியே 70 லட்சம் டன் தான். ஆனால் 73ம் ஆண்டில் இறக்குமதி செய்யப்பட்ட தானியம் 36 லட்சம் டன்தான் என்றால் விளைச்சல் அதிகரித்த 74ல் 49 லட்சம் டன் தானியம் இறக்குமதி செய்யப்பட்டது, 74-ல் நியாய விலைக் கடைகள் மூலம் விநியோகம் செய்யப்பட்டது 1 கோடியே 60 லட்சம் டன் தானியம். இவ்விபரங்கள் 1974—75ம் ஆண்டிற்கான மத்திய அரசின் உணவு இலாகாவின் அறிக்கையில் கூறப்பட்டவையாகும்.

## தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்புச் சங்க செயலாளர்கள் கூட்டம்

தோழர்களே,

மத்திய அமைப்புடன் இணைந்துள்ள மின்சாரத் தொழிலாளர்களின் செயலாளர்கள் கூட்டம், 16—4—75 காலை 9 மணிக்கு திருச்சியில் கோர்ட் சமீபமுள்ள முனிசிபல் பிரயாணிகள் விடுதியில் நடைபெறும். எல்லோரும் தவறாமல் கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

சென்னை 9—4—75

டி. ஜானகிராமன்
பொதுச் செயலாளர்

## 10 ஏக்கருக்கு மேல் உபரி முழுவதையும் கொள்முதல் செய்க

## ஐந்து ஏக்கருக்கு உட்பட்ட சிறு விவசாயிகளிடம் கொள்முதல் கூடாது

# பணிகளைக் கண்காணிக்க சர்வகட்சி குழு

## மார்க்சிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக் குழு கோரிக்கை

மதுரை, ஏப். 9—

**வறட்சி நிவாரண வேலைகளையும் நெல் கொள்முதல் வேலையையும் அதிகார வர்க்கத்திடம் மாத்திரமே விடப்படுவது தான் ஊழலுக்கும் ஊதாரித்தனத்திற்கும் ஊற்றாக விளங்குகிறது. உடனடியாக சர்வகட்சிக் கமிட்டிகளை அமைத்து இந்த வேலைகளைக் கண்காணித்து வரச் செய்ய வேண்டும்.**

வறட்சிப் பணிகளில் உழைக்கும் ஆண்-பெண் தொழிலாளர்களுக்கு தினக் கூலி ரூ. 12 கொடுக்க வேண்டும்.

கொள்முதல் என்ற பேரால் கூலிக்காரர்களின் கூலி நெல்லையும், சிறுநில விவசாயிகளின் சாப்பாட்டு நெல்லையும் பறித்துச் செல்லுவது நிறுத்தப்படவேண்டும்.

வறட்சி நிவாரண நிதி வசூலில் அதிகாரிகள் கெடுபிடிகளில் இறங்கியிருப்பது கண்டிக்கத்தக்கது.

இவ்வாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

சென்றவாரம் சென்னையில் கூடிய தமிழ் மாநிலக் கூட்டத்தில், தமிழகத்தின் வறட்சி நிலை பற்றி கவலையுடன் விவாதித்தது.

### தீர்மானம்

வறட்சியின் கொடுமைகள் நீடித்து வருகின்றன. மக்கள் நிவாரண உதவிகளை எதிர்பார்த்து நிற்கிறார்கள்.

திமுக அரசின் நிவாரண நடவடிக்கைகள் போதுமானதல்ல. அத்துடன் அரசின் நிவாரண நிதி முழுவதும் உழைப்பாளிகளுக்குக் கிடைப்பதில்லை.

குடிநீர்க் கிணறுகளை ஆழப்படுத்த அரசு எடுத்த நடவடிக்கை பலன் அளிக்கவில்லை. காண்ட்ராக்ட் தொகை கட்டுப்படியாகவில்லையென இவ்வேலையைச் செய்ய மறுக்கிறார்கள். பெரும்பகுதிகளில் குடிதண்ணீரின்றி மக்கள் அவதிக்குள்ளாகிறார்கள். குடிதண்ணீர் கிடைக்க உடனடியாக துரித ஏற்பாடுகள் மேற்கொள்ள வேண்டும்.

### பனிரெண்டு ரூபாய் கூலி

வறட்சி நிவாரண வேலைகளில் உழைக்கும் உழைப்பாளிகளுக்கு கிராமத்திற்கு கிராமம் வித்தியாசப்பட்ட மிகக் குறைந்த கூலி கொடுக்கப்படுகிறது. ஆண்களுக்கு ரூ3ம் பெண்களுக்கு ரூ1-50ம் கொடுத்து நாள் முழுதும் வேலைவாங்கும் கொடுமை நீடிக்கிறது. வறட்சிப் பணிகளில் உழைக்கின்ற ஆண் — பெண் இருவருக்கும் தினக் கூலி ரூ 12 கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

### கூடுதல் தக்காவி கடன்

கண்மாய், வாய்க்கால், குளம் மராமத்து வேலைகள் பிற்காலத்தில் முழுப்பலன் அளிப்பதாக இருக்க வேண்டும். கிணறுகளை ஆழப்படுத்த உதவும் முறையில் விவசாயிகளுக்கு இதுவரை கடன் கிடைக்கவில்லை. ஆயிரம் நிபந்தனைகளும்: லஞ்சமும் ஊழலும் மலிந்த நிலவள வங்கிகளால் இதனை நிறைவேற்ற இயலவில்லை.

திமுக அரசு அறிவித்துள்ள 5 கோடி ரூபாய் தக்காவிக் கடனும் போதுமானதல்ல. சுமார் ரூ20 கோடி வரையிலும் தக்காவிக் கடன் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும். இதுவும் சாதாரண விவசாயிகளுக்குக் கிடைக்கவேண்டும்.

வறட்சியால் வாடும் மக்கள் நியாய விலையில் உணவுப் பொருள்கள் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். மாதம் ஒரு குடும்பத்திற்கு 3 கிலோ கோதுமையும் சில கிராமப் பகுதிகளில் 2 கிலோ அரிசியும் கொடுக்கப்படுகிறது. இதிலும் திட்டமிட்ட விநியோக முறையில்லை. இது யானை பசிக்கு சோளப்பொறி என்ற கதையாக உள்ளது இதை அதிகரித்து ஒரே சீராக வழங்கவேண்டும்.

### பாரபட்ச கொள்முதல்

சிறு நிலக்காரர்கள் கொடுமைப் படுத்தப்படுவதும், பெரு மிராசுகள் தப்பித்து கொள்ளுவதுமான கொள்முதல் கொள்கையைத்தான் திமுக அரசு இன்றுவரை அமுலாக்கி வந்துள்ளது.

விவசாயத் தொழிலாளிகளின் கூலி நெல்லையும், சிறு நிலக்காரர்களின் சாப்பாட்டு நெல்லையும் கூட பறித்துக்கொண்டு போகிறார்கள். இந்த நிலை தடுத்து நிறுத்தப் படவேண்டும்.

5 ஏக்கர்வரை கொள்முதலிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டும். 5முதல் 10ஏக்கர்வரை லெவி முறையில் கொள்முதல் செய்யவேண்டும். 10 ஏக்கருக்குமேல் உபரி முழுவதையும் கட்டாயக் கொள்முதல் செய்யவேண்டும்.

இவ்வாறு செய்தால்தான் பெருமிராசுதார்களைக் கட்டுப்படுத்தவும், ஏழை விவசாயிகளுக்கும் மக்களுக்கும் நிவாரணம் அளிக்கவும் உதவ முடியும்.

### சர்வகட்சி கண்காணிப்பு

எல்லாவற்றுக்கும் மேலாக, திமுக அரசு அதிகார வர்க்கத்தினர் மூலம் கொள்முதல், விநியோகம், வறட்சி நிவாரண வேலைகள் அனைத்தையும் முடித்துவிட நினைக்கிறது. இதுதான் ஊழலுக்கும் ஊதாரித்தனத்திற்கும் ஊற்றாக விளங்குகிறது.

உடனடியாக சர்வகட்சி மக்கள் கமிட்டிகள் அமைத்து இவ்வேலைகளைக் கண்காணித்துநிறைவேற்றவும்,

இந்த நோக்கில் விவசாய சங்கங்கள் கொடுத்துள்ள மற்ற கோரிக்கைகளை நிறைவேற்றவும் வற்புறுத்துகிறோம்.

### மத்திய அரசின் ஓரவஞ்சனை

தமிழகத்தில் இவ்வளவு கடுமையான வறட்சிநிலைநிலவும்போது, போதுமான நிதியும, உணவுப்பொருட்களும் அளிக்காமல் அரசியல்ஓரவஞ்சனையாக நடந்து கொள்ளும் மத்திய அரசின்போக்கினை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

இப்படிப்பட்ட போக்கை எதிர்க்க மக்களை அணி திரட்டுவதற்குப் பதிலாக மாநில அரசு வறட்சிநிவாரணநிதி திரட்டி நிவாரண வேலைகளை முடித்து விட நினைப்பது பலனளிக்கத்தக்க மாற்றுவழியாகாது.

இந்தவறட்சி நிவாரண நிதியையும் சாதாரண மக்களிடம், வியாபாரிகளிடம் மிரட்டிவசூல் செய்யும் போக்கை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

மாநிலமுதலமைச்சர்—மத்திய நிதியமைச்சர் இருவருக்கிடையிலுள்ள சர்ச்சையில் நிவாரணமகோரி நிற்கும மாநில மக்கள் நலன்பாதிக்கப்படுவது அனுமதிக்கமுடியாதது என எச்சரிக்கிறோம்.

# நிருபர்களிடையே தோழர் பி. ஆர்.

ஏப்ரல் 1-ந் தேதி முதல் 4-ந் தேதி வரை சென்னை நகரில் கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு கூட்ட முடிவுகளை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு (பொலிட் பீரோ) உறுப்பினர் தோழர் ராமமூர்த்தி சென்னையில் செய்தியாளர்களிடையே விளக்கிப் பேசினார்,

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக்குழு முடிவுகளைப் பற்றிய ஓர் அறிக்கையையும் அவர் வெளியிட்டார். அந்த அறிக்கையையொட்டி செய்தியாளர்கள் கேட்ட கேள்விக்கு தோழர் பி. ஆர் பதிலளித்தார்.

### காண்ட்ராக்டர்களின் வலையில் அதிகாரிகள்

விவரம் வருமாறு;—

கேள்வி:— தமிழ்நாட்டுக்கு மேலும் அதிகமான வறட்சி நிவாரண நிதியை மத்திய அரசு ஒதுக்க வேண்டும் என்று உங்கள் கட்சி வற்புறுத்தி இருக்கிறதே! வறட்சி நிவாரணப் பணிகளில் ஊழல் நடப்பதால் மத்தியஅரசு கணக்குப்பார்த்த பின்னர்தான் மேலும நிதி ஒதுக்க முடியும் என்று மத்திய நிதி அமைச்சர் திரு சி சுப்பிரமணியம கூறி இருப்பது பற்றி உங்கள் கட்சி நிலை என்ன?

பதில்.— நாங்கள் ஏற்கனவே தெளிவுபடுத்தி இருக்கிறோம. இந்த வறட்சி நிவாரணப் பணிகளில் ஊழல் நடக்காமல் தடுக்க ஒரே வழிதான் இருக்கிறது, அதுதான், சர்வகட்சி கண்காணிப்புக் குழு. வறட்சி நிவாரணப் பணி நடக்கும் ஒவ்வொரு இடத்திலும் சர்வ கட்சிக் கண்காணிப்புக் குழு அமைத்து வேலை சரிவர நடக்கிறதா, கூலி ஒழுங்காக கொடுக்கப்படுகிறதா என்பதைக் கண்காணிப்பதன் மூலமாகத்தான் ஊழல் இல்லாமல் தடுக்க முடியும்.

மத்திய அரசு கொடுக்கும் பணம் ஒழுங்காக செலவிடப்படுகிறதா என்று தணிக்கை செய்ய மத்திய அரசின் தலைமை தணிக்கையாளர் இருக்கிறார். ஒவ்வொரு இடத்திலும் மத்திய அரசு அதிகாரிகள் சென்று சரிபார்த்து அதன் பிறகு தான் மேலும் நிதி ஒதுக்கீடு செய்வதுஎன்பது நடைமுறையில் சாத்தியமல்ல. அதற்குரிய ஆள்பலமோ, வசதியோ மத்திய அரசுக்கு இல்லை.

அதுமட்டுமல்ல 'மாநில அரசுஅதிகாரிகள் தான் ஊழல் பேர்வழிகள், மத்திய அரசு அதிகாரிகள் யோக்கியர்கள் என்று ஏற்கமுடியாது. மத்திய அரசு அதிகாரிகளையும்கூட காண்டிராக்டர்கள் வளைத்துப் போட்டுவிடுவார்கள்.

இது மட்டுமல்ல. தமிழ்நாட்டுக்கு வந்த சுப்பிரமணியமே கூட, இங்கு வறட்சிநிவாரணப்பணிகள் ஒழுங்காக நடப்பதாக 'சர்டிபிகேட்' கொடுத்துவிட்டுப்போயிருக்கிறார். மக்களுக்கு நிவாரணம் அளிப்பது தான் முக்கியம். இதற்கு ஒதுக்கப்படும் பணம், பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஒழுங்காகப்போய்ச்சேருகிறதா என்பதுதான் முக்கியம்.

அதற்காகத்தான் சர்வகட்சிக் கண்காணிப்புக் குழு அமைக்கச் சொல்கிறோம்.

### சர்வகட்சிக் குழு எப்படி அமைப்பது?

கேள்வி: எத்தனையோ கட்சிகள் தமிழ்நாட்டில் உள்ளனவே! எப்படி குழு அமைப்பது? யார் யாரைச் சேர்ப்பது என்ற சிக்கல் எழும் என்று கருணாநிதி கூறுகிறாரே!

பதில்: எல்லாக் கட்சிகளையும் சேர்க்கா விட்டால் முக்கிய கட்சிகளையாவது அவர் சேர்த்துக் கொள்ளட்டும். ஊழல் ஒழிய வேண்டும் அதுதானே நம் குறி.

சில இடங்களில் வறட்சி நிவாரணப் பணியில் ஈடுபட்ட தொழிலாளருக்கு ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் என்று கூலி கொடுத்து விட்டு, 5 ரூபாய் வாங்கியதாக கையெழுத்துப் போடும்படி காண்டிராக்டர்கள் மிரட்டுகிறார்கள் என்ற தகவல் எங்களுக்கு வந்தது. எங்கள் கட்சித் தோழர்கள் இதை அறிந்து நேரடியாகப் போய், உரிய ஊதியம் கொடுக்கப்படுகிறதா என்று கண்காணித்தார்கள். ராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூருக்கு, பரமக்குடியில் இருந்து எங்கள் கட்சித் தோழர்கள் போய் கண்காணித்தார்கள். தொழிலாளருக்கு நியாயமான ஊதியம் கிடைத்தது. இதேபோல் தமிழ்நாடு முழுவதும் சர்வகட்சிக் கண்காணிப்புக் குழு அமைக்கப்பட்டால் இந்த ஊழலைத் தடுக்க முடியும்.

### வெளிநாட்டிலிருந்து அரிசி இறக்குமதி செய்ய வேண்டுமா?

கேள்வி:— தமிழ்நாட்டில் உணவுப் பஞ்சத்தைப்போக்க, அரிசியை இறக்குமதி செய்து தராமல் மத்திய அரசு மறுப்பதாக கருணாநிதி குற்றம்சாட்டுகிறாரே?

பதில்:— மத்தியஅரசு வெளிநாட்டிலிருந்து கோதுமை இறக்குமதி செய்கிறது. தமிழ்நாடு அரசோ அரிசியை இறக்குமதிசெய்யச்சொல்கிறது.

இறக்குமதிசெய்யாமலேயே இங்கே அரிசியும் கோதுமையும் கிடைக்கிறது. அநியாயவிலைகொடுத்தால் கோதுமையும் அரிசியும் மார்க்கெட்டில் தாராளமாகக் கிடைக்கிறது. இதற்கு என்ன அர்த்தம்?

உணவு தானியம் போதிய அளவு இருக்கிறது. பெருநிலச்சுவான்தார்களும கொள்ளைக்கார வியாபாரிகளும் அரிசியையும் கோதுமையையும் பதுக்கி வைத்துக் கொண்டு அதிகவிலைக்கு விற்று கொள்ளை லாபம் சம்பாதிக்கிறார்கள்.

இதற்கு மத்திய அரசும் மாநில அரசுகளுமே காரணம். கோதுமையும் அரிசியும் அதிகமாகவிளையும் மாநிலங்களில் இந்திரா காங்கிரஸ் அரசு கொள்முதல் செய்வதில்லை. சிறு நிலச் சொந்தக்காரர்களிடம் கெடுபிடி செய்து, அவர்கள் சாப்பாட்டுக்காக வைத்திருக்கும் அரிசியையும் கோதுமையையும பறித்துக்கொள்ளும அதிகாரிகள் பெருநிலச் சுவான்தார்களைத் தொடுவதே இல்லை. தமிழ்நாட்டிலும் இதே கதைதான் நடக்கிறது. சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கோ கையில் பணமில்லை. எனவே அறுவடை முடிந்ததும் தங்களிடம் இருக்கும் தானியத்தை விற்று விடுகிறார்கள். பெரு நிலச்சுவான்தார்கள் தானியத்தைப் பதுக்கிவைத்து அதிக விலைக்கு விற்கிறார்கள்.

மற்ற மாநிலங்களில் எல்லாம் கொள்முதல் செய்யாமல அரியானாவையும் பஞ்சாபையும் மட்டுமே கோதுமைக்கு நம்பு

(2-ம் பக்கம் பார்க்க)

## 30 கோடி கொடுத்தால் என்ன? 300 கோடிதான் கொட்டினால் என்ன?

### தியூ பிழைக்கவே மாட்டான்

நியூயார்க், ஏப். 8—

அமெரிக்க ஜனாதிபதி போர்டு மேற்கொண்டும் 30 கோடி டாலர் ஆயுதங்களை தென்வியட்னாம் தியூ அரசுக்கு அனுப்பிவைத்தால், கம்யூனிஸ்ட படைகளை தடுத்து நிறுத்திட முடியும்' என்று நம்புகிறார்.

ஆனால், 30 கோடி டாலர் ஆயுதம் மட்டுமல்ல அதற்கு மேலும் எத்தனை கோடி டாலர் ஆயுதங்களைக் கொடுத்தாலும் தியூ ஆட்சியைப் பாதுகாக்க முடியாது என்ற எண்ணம அமெரிக்க ராணுவத்தலைமையிடம் மேலோங்கியிருக்கிறது.

இந்த உதவியை ஏற்கெனவே செய்திருக்க வேண்டுமென்றும — இப்பொழுது செய்வது காலதாமதமான செயல் என்றும்—இப்பொழுது ஆயுதங்கள் அனுப்பினாலும், அதுதென்வியட்னாமைப் போய்ச் சேர்ந்து, தியூ படைகளிடம வினியோகிப்பதற்குள்ளாக சண்டையே முடிந்துவிடுமென்றும் அவர்கள் கருதுகிறார்கள்.

ஏற்கெனவே கம்யூனிஸ்ட் படைகளிடம் தென்வியட்னாமின மூன்றிலிருபகுதி இருப்பதால், அதன் முன்னேற்ற வேகம் அதிகமாக இருக்கிறதென்றும — தியூ விடம இருப்பதெல்லாம் செய்கோன் நகரும், அதைச்சுற்றிய பிரதேசங்களும் நெல்விளைச்சல் மிகுந்த மேகாங்நதிபிரதேசமும்தான என்றும், ஆனாலும் இந்த மேகாங் பிரதேசத்தை நோக்கியும் கம்யூனிஸ்ட் படைகள் பாய்ந்து வருவதாகவும அமெரிக்க இராணுவ தளகர்த்தர்கள் கூறினர்.

அமெரிக்க பாதுகாப்பு இலாகா காரியதரிசி சிலேசிங்கர், 'எப்படியும் இன்னும ஒருமாத காலத்துக்கு தியூ அரசு தாக்குப்பிடிக்கும்'' என்று நம்புகிறார்.

சிப்பாய்களுக்கு பயிற்சியளிக்கும் அமெரிக்க கேப்டன்கள், தென் வியட்னாம் தியூ படைகளின் தோல்வி கண்டு அதிர்ச்சியும் திகிலும அடைந்திருக்கின்றனர்.

எண்ணிக்கை பலத்திலும் சரி, போர்ப்பயிற்சியிலும் சரி, ஆயுத வகைகளிலும சரி, எல்லாவற்றிலும் கம்யூனிஸ்ட படைகளைவிட தியூபடைகள் மேலான நிலையில்தான் இருந்தன. அப்படியிருந்தும் கம்யூனிஸ்ட் படைகளிடம அடிபட்டு ஓடிவருவது என்றால் அதன் அர்த்தமே புரியவில்லையே!''— என்று கலங்குகிறார்கள்.

மற்றும, தென்வியட்னாம் கம்யூனிஸ்ட் படைகள், தங்கள் முழு வேகத் தாக்குதலை இப்பொழுது தொடுக்கமாட்டார்களென்றும், 1976 ஜனாதிபதி தேர்தல அமெரிக்காவில் நடக்கும்போதுதான் தொடுப்பார்களென்றும் அமெரிக்க ராணுவ உளவாளி இலாகா கூறுகிறது.

## இந்திராவின் ஆசியோடு ஜனநாயகம் கொல்லப்படுகிறது

### மேற்குவங்க நிலைபற்றி ஜே.பி.

பாட்னா, ஏப். 9—

கல்கத்தா பல்கலைக்கழகத்தின் முன்னால் தன்னை காங்கிரஸ் குண்டர்களும், வலது கம்யூனிஸ்டு குண்டர்களும் தாக்கியது குறித்து ஜெயப்பிரகாஷ் நாராயண் அபிப்பிராயம் கூறினார்.

'குண்டர்கள் என்னைத் தாக்குவதற்கு மத்திய அரசாங்கமும மேற்குவங்க அரசாங்கமும் ஒப்புதல் கொடுத்திருக்கின்றன. இது போன்ற பாசிசத்தன மான வெறியாட்டத்துக்கு பிரதமர் இந்திரா காந்தியும் மேற்குவங்க முதலமைச்சர் சித்தார்த்த சங்கர் ரேயும் ஒப்புதல் அளித்திருந்தால்தான் இவ்வாறு நடக்கமுடியும்.

இந்தப் போக்கு நீடிக்குமேயானால், தேர்தல்களும் கூட கேலிக்கூத்தாகி விடும. ஓட்டுச் சாவடிகளையும் குண்டர்கள் கைப்பற்றுவார்கள்.

1972ம ஆண்டு பொதுத்தேர்தலின் போதும், உப தேர்தல்களின் போதும, இப்படிப்பட்ட அக்கிரமங்களை மேற்குவங்கத்தில் பார்த்தோம. காங்கிரஸ் கையில் ஜனநாயகம பாதுகாப்பாக இல்லை. இந்திராகாந்தியின ஆசீர்வாதத்தோடு ஜனநாயகத்தை மேற்குவங்கத்தில் கொன்று விட்டார்கள்' என்றார்.

தீக்கதிர்

# தைவான், மக்கள் சீனக்குடியரசில் சேரும் நிலை வளரும்

சியாங்—கே—ஷேக், தைவானில்இறந்தான். மக்கள் சீனக்குடியரசு 1949 இல் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் ஏற்பட்ட போது—சீனவின் ஒரு பாகமான தைவான் தீவுக்கு— (முன்பு பார்மோசா என்றழைக்கப்பட்டது) சியாங் கே—ஷேக் ஓடிப்போய் அமெரிக்கா உதவியுடன் தைவானில் ஒரு தனி கம்யூனிஸ்ட எதிர்ப்பு அரசை நடத்தினன்.

அமெரிக்காவுக்கும் தைவானுக்கும் பரஸ்பர ராணுவ உதவி ஒப்பந்தம் கையெழுத்தாகியது. அமெரிக்கா ஒரு படை தளத்தையும் தைவானில் ஏற்படுத்திக்கொண்டது, அமெரிக்க ஆயுதங்கள் தைவானுக்கு தாராளமாக வழங்கப்பட்டன. அமெரிக்க 7-வது கடற்படை அவ்வப்போது ரோந்து வந்து சியாங்—கே — ஷேக்குக்கு பாதுகாப்பு அளித்து வந்தது. சியாங்கும் விடாது சீன மீது படையெடுப்பேன் என்று வாய்ச்சவடால் அடித்துக்கொண்டு இறுதியில் இறந்தே போனன்,

சியாங்கே-கே-ஷேக் இறந்ததும் தைவான் மக்களுக்கு சீனத் தாயகத்தோடு வந்து சேருமாறு பீகிங் அரசு அழைப்பு விடுத்துள்ளது. சியாங்கே-ஷேக்கின் அரசியல் கட்சியாய் முன்பு சீனத்திலிருந்த கோமிண்டாங்கட்சியைச் சேர்ந்த 200க்கு மேற்பட்ட ராணுவ அதிகாரிகளுக்கு பரிபூரண விடுதலை அளித்து அவர்கள் தைவானுக்குச் சென்று மக்களிடம் நேச உறவை பலப்படுத்தும் பொருட்டு சில வாரங்களுங்கு முன்பே சீனக் குடியரசு நடவடிக்கை எடுத்துள்ளது. இத்துடன், பீகிங்கில் நடக்கவிருக்கும் அகிலசீன விளையாட்டுப் போட்டிகளில் தைவான் விளையாட்டுககாரர்களும் பங்குகொள்ள அழைப்பு விடுத்துள்ளது. தைவான் தாயகத்தோடு சேரவேண்டுமென்ற எண்ணம் மேலும் தைவானில் பலப்படுமென்று எதிர்பார்க்கலாம்.

ஆனல்—தைவானின் புதிய ஜனதிபதியும், பிரதமமந்திரியாக இருக்கும் சியாங்கின் மகன் சியாங்—சிங்—குவோவும் அவர்களைச் சுற்றியுள்ள மேல்தட்டு வர்க்க வசதிக்காரர்களும் சீனக் குடியரசின் ஒரு அங்கமாக தைவான் மாறுவதை பலமாக எதிர்ப்பார்கள். ஆனல் அவர்கள் இந்தப் பிரச்னையை எவ்வளவு காலம் ஒத்திப்போட முடியுமென்பது அமெரிக்காவின் ஆயுத பலமும் கடற்படை பலமும் பணஉதவியும் எவ்வளவு தூரம் மேலும் கிடைத்துவரும் என்பதைப் பொறுத்தே இருக்கிறது,

பீகிங்குக்கு நிக்சன் விஜயம் செய்த காலத்திலிருந்து அமெரிக்காவுக்கும் மக்கள்சீனத்திற்கும் தொடர்பும் வியாபார உறவுகளும் ஏற்பட்டிருக்கின்றதென்பது உண்மையே. ஆனல் இது இன்னும் இரு நாடுகளும் பரஸ்பரம் தூதுவராலயங்களை ஏற்படுத்திக் கொள்ளும் ராஜீய உறவாக அபிவிருத்தி காணவில்லை. இதற்குக் காரணம் அமெரிக்காஇன்னும் தைவான் அரசுக்கு அங்கீகாரம் வழங்கி இருப்பதாகான். இரண்டு சீன நாடுகள் என்ற கூற்றை மக்கள் சீனம் ஒப்புக் கொள்ள மறுத்துள்ளது.தைவான் அரசு அங்கீகாரத்தை ரத்து செய்ய வேண்டுமென்று அமெரிக்காவை வற்புறுத்தியுள்ளது.

சியாங்-கே-ஷேக் உயிருடன் இருந்தவரை இதை தட்டிக்கழித்த அமெரிக்க அரசாங்கம் நீண்டநாட்களுக்கு அதே நிலையை அனுசரிக்க முடியாது. இன்று தென் கிழக்கு ஆசியாவில் அமெரிக்க செல்வாக்கு எவ்வளவு தாழ்ந்து போயிருக்கிறதென்பது உலகறிந்த விஷயமாய் விட்டது.

அமெரிக்க ராணுவஉதவியோ தலையீடோ பொம்மை அரசுகளைக் காப்பாற்ற பயன்தரவில்லை என்று வியட்நாம், கம்போடியா அனுபவங்கள் காட்டிவருகின்றன இந்த நிலையில் மக்கள் சீனகுடியரசின் வற்புறுத்தலுக்கு இணங்கி தைவான் அங்கீகாரத்தைப்பற்றி அமெரிக்கா யோசிக்கவேண்டிவரும் தைவானிலும் மக்களின் விருப்பம் தாயகத்தை நோக்கி வளரக்கூடும் அமெரிக்காவிலேயே மக்களின் அபிப்பிராயம். தைவான் விஷயத்தில் சீனக்குடியரசுக் கெதிராக அமெரிக்கத்தலையீடு கூடாது என்று தோன்றினலும், சமீப கால அனுபவங்கள் நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ஆச்சரியப்படுவதற்கில்லை. அமெரிக்காவுக்கு சோதனைக் காலமே.

சமாதான பூர்வமாகவே தைவான் சீனத்தாயகத்துடன் சேர்வதற்கு மக்கள் சீனக் குடியரசும் முயற்சிக்கும் அதே சமயத்தில் இதற்கு எதிர்ப்பு நீடிக்குமேயானல்வேறு நடவடிக்கைகளுக்கும் தயாராயிருக்கும். அமெரிக்காவின் அங்கீகாரமும் ராணுவ உதவியும் இல்லாமல் போகுமானல் சொந்தக் காலில் நின்று மக்கள் சீனக்குடியரசைதைவான் அரசு நீண்டகாலம் எதிர்த்து நிற்கமுடியாது.

## நாவலாசிரியர்கள்—நாடகாசிரியர்கள் ரேடியோ நாடக ஆசிரியர்கள்

# முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தில் சேர்ந்தனர்

சென்னை, ஏப். 8—

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் அமைப்புக் குழு சார்பில் தோழர்கள். தணிகைச்செல்வனும் செந்தில் நாதனும் சென்னை எல் எல் ஏ கட்டடத்தில் சென்னையில் உள்ள முற்போக்கு எழுத்தாளர்களின் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர். முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் அமைப்பாளர் தோழர் கே. முத்தையா தலைமை வகித்தார்.

அன்று காலை 10—30 மணிக்கு ஏராளமான எழுத்தாளர் கலந்து கொண்ட இக்கூட்டத்தில் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் கொள்கை அறிக்கையை விளக்கினர். அதன் பேரில் முன்னாள் மேயர் எஸ். கிருஷ்ணமூர்த்தி, பிரபல நாவலாசிரியர் ஆர். வி. முதற்கொண்டு பல எழுத்தாளர்கள், நாடகாசிரியர்கள் ரேடியோ நாடக ஆசிரியர்கள் ஆகியோர் முற்போககு எழுத்தாளர் சங்கத்தின கொள்கைஅறிக்கையை வரவேற்றுப் பேசினர்.

நச்சு இலக்கியங்கள் நமது கலாச்சார வாழ்வை நாசமாக்கிக்கொண்டிருக்கும் காலத்திலே, இப்படிப்பட்டதொரு இயக்கம் தோன்றி, வியாபார நோக்கத்துடன், கலாச்சார வாழ்வைச் சீர்குலைப்பதை கடமையாக எதிர்க்க முன் வந்துள்ளதை பாராட்டினர்.

இதன் பிறகு 24 பேர் (நாவலாசிரியர்கள்—நாடகாசிரியர்கள்—ரேடியோ நாடகாசிரியர்கள் உட்பட) முற்போக்கு எழுத்தாளர்சங்கத்தில் சேர்ந்தனர்.

# லாக்-அப் சாவு

தஞ்சாவூர், ஏப். 8—

தஞ்சை மாவட்டம கள்ளப் பெரம்பூர் போலீஸ் லாக்-அப்பில் கடந்த 6-4-75ல் அடைக்கப்பட்டிருந்த 29 வயதுள்ள ஒரு வாலிபர் செத்துக் கிடந்தார்.

அவரிடம்பிரஞ்சுப்பாலிஷ் இருந்ததாகவும், இயற்கையான காரணத்தால் தான் அவர் செத்துப் போனதாகவும் தஞ்சாவூர் ஆர் டி ஓ விசாரிததில் தெரிய வந்ததாம்!

இந்த வாலிபர், தான் சாவதற்கு லாக்-அப்தான் பொருத்தமான இடம் என்று தேர்ந்தெடுத்தார் போலும்!

## சைகோன் அரண்மனை மீது

# விமான ஓட்டி குண்டு வீச்சு தியூ தப்பி விட்டான்

சைகோன், ஏப். 8—

தென்வியட்னும் பொம்மை அரசின் ஜனதிபதி தியூ தங்கியிருந்த அரண்மனைமீது போர்க்களத்திலிருந்து திரும்பிவந்து கொண்டிருந்தவிமானத்திலிருந்து குண்டுகள் வீசப்பட்டன. ஆனல் தியூ எவ்வித காயமின்றிதப்பிவிட்டான்.

அரண்மனையின் உச்சிப் பகுதியும், பொம்மை அரசின் கொடியும் சேதமடைந்தன.

குண்டு வீச்சை நடத்திய விமான ஓட்டி விமானத்திலேயே பறந்து சென்றுவிடடார்.ஆனல் அவ்விமானத்தில் 100 மைல் தூரம் செல்லுவதற்கான எரிபொருளே இருந்ததுஎன்று கூறப்படுகிறது.

குண்டுவீச்சு நடந்து முடிந்த கொஞ்ச நேரத்தில் அந்த அரண்மனையில் இருக்கும் 3 தனி ஹெலிகாப்டர்களைக் காணேம் என்றுகூறப்படுகிறது.

எந்த நேரமும் சாவை எதிர்பார்த்துக் கொண்டு செத்துக் கொண்டிருக்கும் தியூ, தன்குடும்பத்தோடு மாற்று இடத்திற்கு ஓடி இருப்பான் என்றும் கூறப்படுகிறது.

இக்குண்டு வீச்சு பற்றி தென்வியட்னும் புரட்சி அரசின் அதிகாரியொருவர் கருத்து தெரிவிக்கையில், ஒவ்வொருவரர்லும், சொந்த ராணுவத்தினராலும் கூட. தனது அதிகாரிகளாலும்கூட பொம்மை அரசின் ஜனதிபதி தியூ வெறுக்கப்படுகிருன் என்பதை இக்குண்டு வீச்சு காட்டுகிறது எனக்குறிப்பிட்டார்.

குண்டு வீச்சு நடந்து முடிந்த சிலமணி நேரங்களுக்கு பிறகு கீ என்னும் பெயர் கொண்ட முன்னாள் விமானப்படை கமாண்டர், நிலைமையை கட்டுப்படுத்துவதற்கான வகையில் ஆட்சியின் தலைமை மாறுவதற்கான சந்தர்ப்பம் வந்துள்ளது எனக் குறிப்பிட்டார்.

தியூவிற்கு எதிரான 12 அரசியல் கோஷ்டிகள் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையில் உடனடியாக தியூ அரசாங்கம் வெளியேற்றப்பட்டு விடுதலைப் படையுடன் பேச்சு வார்த்தை நடத்தும் அரசாங்கம்நிறுவப்படவேண்டும் எனக் கூறியுள்ளார்.

மேலும், உடனடியாக சிவிலியன் வேடத்திலிருக்கும் அமெரிக்க ராணுவ அதிகாரிகளும், ஆலோசகர்களும் உடனடியாக வெளியேற வேண்டும் என்றும் அவ்வறிக்கையில் கோரப்பட்டுள்ளது. இவ்வறிக்கையில் 12 அரசியல் கோஷ்டிகள் சார்பாக 3 நாடாளுமன்ற உறுப்பினர்கள், 6கத்தோலிக்க பாதிரியார்கள், சைகோன் மக்களின் பிரதிநிதிகள் மூவர் கையெழுத்திட்டுள்ளனர்.

# அமைச்சர் சண்முகம் மீது ஊழல் விசாரணை

சென்னை, ஏப். 8—

அமைச்சர் ப. உ. சண்முகத்தின் மீது அரிசி ஊழல் குற்றச்சாட்டு காரணமாக தமிழ்நாடு அரசாங்கம் ஒரு நபர் விசாரணைக் கமிஷனை நியமித்துள்ளது.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி ராம்பிரசாத்ராவ் ஒரு நபர் விசாரணைக் கமிஷனுக நியமிக்கப்பட்டுள்ளார்.

1971-ம் ஆண்டில் தஞ்சாவூர் கோஆப்ரேடிவ் மார்க்கெட்டிங் பெடரேசனல் நடத்தப்பட்ட அரிசிவிற்பனையில் ரூ. ஒன்றரை கோடி ஊழல் ஏற்பட்டுள்ளது என்பதும் தாண்டவராயன் என்பவருக்கு டெண்டர் அளிப்பதில் அமைச்சர் சண்முகம் தனது அதிகாரத்தை பயன்படுத்தியுள்ளார் என்பதும் குற்றச்சாட்டு.

இக் குற்றச்சாட்டு மீது விசாரணை நடத்தி 3 மாதத்தில் அறிக்கை சமர்ப்பிக்குமாறு கமிஷன் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

# மதுரையில் புதிய சங்கம் உருவாகிறது

மதுரை, ஏப். 8—

மதுரையில், சிஐடியூ தலைமையில் சுமை தூக்கும் தொழிலாளர்கள் சங்கம் அமைக்கப்படுகிறது.

இதற்காக, சுமை தூக்கும் கைவண்டி — மாட்டு வண்டி தொழிலாளர்களும் பாரம் தூக்கும் தொழிலாளர்களும் பங்கு கொள்ளும் அமைப்புக் கூட்டம் வருகிற 13ந் தேதி மாலை 5 மணிக்கு முனிச்சாலை சிஐடியூ அலுவலகத்தில் நடக்கிறது இதில் தமிழக சிஐடியூவின் பொருளாளர் வி கார்மேகமும், மாநிலக் குழு உறுப்பினர் வி பாலகிருஷ்ணனும் கலந்து கொண்டு பேசுகிருர்கள்.

இக்கூட்டத்துக்கான ஏற்பாடுகளை, அமைப்புக் கன்வீனர்களான எஸ் மாடசாமி, டி கருப்பையா, ஆர் மணி, ஆர் சோனை, ஆர் செல்லையா, கே குமாரவேலு, கே வேலு ஆகியோர் கவனித்து வருகின்றனர்.

# பேரமைப்பு சார்பில் ஊர்வலங்கள்

மதுரை, ஏப். 7—

அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள், உள்ளாட்சித்துறை ஊழியர்களின் பேரமைப்பு சார்பில் கடந்த 5-ந் தேதி யன்று மாநிலம் முழுவதும் ஊர்வலங்களும் பொதுக்கூட்டங்களும் நடந்தன,

மத்திய அரசு ஊழியர்க்ளுக்கு ஈடான அகவிலைப் படி வழங்கக்கோரியும், தமிழ்நாடு என்ஜிஓ யூனியன் நடவடிக்கைக் குழுத் தலைவர் திரு ஆர் ஏ கூடலிங்கம் மீதான சஸ்பென்சன் உத்திரவை ரத்துச் செய்யக்கோரியும், நடந்த இந்த ஊர்வலங்களிலும் கண்டனக் கூட்டங்களிலும் பல்லாயிரக்கணக்கானேர் கலந்து கொண்டனர்.

### நெல்லையில்

பேரமைப்பின் திருநெல்வேலி வட்டக்கிளை சார்பில் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகம் முன்பிருந்து ஆசிரியர் கூட்டணி செயலாளர் திரு ராமுலு தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு ஜங்சன், இரயில்வே மீட்டர்ரோடு வழியாக வருவாய்த்துறை இயக்கக்கட்டிடத்தை அடைநதது. அங்கு என். ஜி. ஓ சங்க நடவடிக்கைக குழுத் தலைவர் திரு. முருகையா தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் சிவ சங்கரன் (எல், ஐ சி.) நடராஜன்(மின்ஊழியர்] பேரமைப்பு சார்பில் வைத்தியநாதன், ராமுலு ஆழ்வார்வேலுச்சாமி,பெரிய குருசாமித்தலைவர், ஆண்டியப்பன் (கால் நடைஊழியர்) ஆ. இராஜகோபால் (ஆசிரியர் கூட்டணி) பேசினர்.

மதுராந்தகம்,அச்சிறுபாக்கம்சித்தாமூர் லத்தூர் ஆகிய கிளைகள் இணைந்து பொதுக்குழுஉறுப்பினர்கள் சிகாமணி தலைமையில் ஊர்வலமும், சே வே இராமசாமி தலைமையில் சிறப்புக் கூட்டமும் நடத்தப்பட்டது அதில்மாநில துணைச் செயலாளர் மா ச. முனுசாமி, மாவட்ட துணைத் தலைவர் ஜே வேணுகோபால், லத்தூர் கிளைச் செயலாளர் கேசவன், மாவட்ட தொழுநோய் தடுப்பு பணியாளர் சங்கத் தலைவரும் என் ஜி ஓ சங்கச் செயலாளருமான த எத்திராஜன் மற்றும் ஆர் நாராயணசாமி (மார்க்சிஸ்ட்) இனியன் [அதிமுக] ஆகியோர் பேசினர்.

### இராமநாதபுரம்

இங்கு தலைமை அஞ்சல் நிலையத்திலிருந்து ஆசிரியர் கூட்டணி மாநில துணைச் செயலாளர் ஈஸ்வரன் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு—முழக்கங்களை எழுப்பிக்கொண்டு ராணிசத்திரத் தெரு அடைந்து அங்கு பொதுக்கூட்டம் நடந்தது.

திருவாளர்கள், பாஸ்கரன்,இருளப்பன், தினகரன் ஈஸ்வரன் ஆகியோர் பேசினர்.

### பழனியில்

இங்கு திரு வரதராசன் (ஆசிரியர் கூட்டணி] தலைமையில் தாலுகா ஆபீசிலிருந்து ஊர்வலம் புறபபட்டு முக்கிய வீதிகள் வழியே சென்று மீண்டும் தாலுகா ஆபீஸ் அடைந்தது.

அங்கு திரு. அகிலாண்டம் (விவசாய வருமானவரி அதிகாரி) தலைமையில்நடந்த கூட்டத்தில் துணைத் தாசில்தார் தண்டாயுதம், ராமதாஸ் (ஆசிரியர் கூட்டணி) கே. வெங்கடேசன்(மின்வாரியம் பசுவேஸ்வரன் |வங்கி விரிவாக்க அதிகாரி சாமிக்க்ண்ணு ஆகியோர்பேசினர்

# சீன கம்யூனிஸ்ட் கட்சி ஸ்தாபக தலைவர் காலமானுர்

பீகிங், ஏப். 5—

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகத்தலைவர்களில் ஒருவரும், மக்கள் சீனத்தின முன்னாள் தற்காலிக தலைவராக இருநதவருமான துங்-பி-வூ கடந்த புதன் கிழமையன்று காலமானுர்.

அவருக்கு வயது 90.

# 'லே-ஆப்'க்கு முழு ஊதியம் தர கோரிக்கை

தாழையூத்து, ஏப். 7—

இங்குள்ள சிமெண்ட் ஆலை நிர்வாகம் தொழிலாளர்களைப் பழிவாங்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ளதையும், மின்வெட்டை காரணம் காட்டி லே-ஆப் கொடுப்பதைக் கண்டித்தும் இங்கு பொதுக்கூட்டங்க்ள் நடந்தன.

1-ந் தேதியன்று தாழையூத்தில் கே. சுடலைமுத்து தலைமையில் நடநக கூட்டத்தில் நெல்லை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலரளர் சு, பாலவிநாயகம், எஸ். மாடசாமி ஆர். இளையபெருமாள் ஆகியோருப்,

2-ந் தேதி கரையிருப்பில் இசக்கித்தேவர் தலைமையில் நடந்த கூட்டத்தில் சு.பாலவிநாயகம்எம்.ராஜாங்கம் எஸ். மாடசாமி,என்.எஸ் மணி, ஆர் இளையபெருமாள் இ சப்பாணி ஆகியோரும் பேசினர் இருகூட்டங்களின் இறுதியில் மதுரை குமார் குழுவினரின் இன்னிசைச்ச்சேரிகள் நடந்தன.

இக்கூட்டங்களில், லே-ஆப் காலத்துக்கு முழுச் சமபளம் வழங்கக் கோரியும் கரையிருப்பிலுள்ள விவசாய வித்துப்பண்ணை தொழிலாளர்களுக்கு கூலியை அதிகரிக்கக்கோரியும் வற்புறுத்தப்பட்டது.

# மணமங்கலத்தில் மாதர் சங்கம்

திருவாரூர், ஏப். 5—

திருவாரூரை அடுத்துள்ள மணமங்கலத்தில் ஜனநாயக மாதர்சங்கக்கிளை அமைப்புக்கூட்டம் கடந்த 3-ந் தேதியன்று நடந்தது. மாவட்டச் செயலாளர் என் விசாலாட்சி, தோழர் கிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்டு உரையாற்றினர்.

கிளைத் தலைவராக அம்மாக்கண்ணு, செயலாளராக காசியம்மாள், பொருளாளராக சீனியம்மாள் ஆகியோரும் கிளியம்மாளும், வள்ளியம்மாளும் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# சீரழியும் அமெரிக்க கல்வியும் கலாச்சாரமும்

வாஷிங்டன், ஏப். 8—

செல்வம் கொழிக்கும் அமெரிக்காவில் கொள்ளை. வழிப்பறி, அடிதடிகள்,கல்வி கற்கும் பள்ளிக்கூடங்களில் கற்பழிப்பு போன்ற சம்பவங்கள் அதிகரித்துள்ளன.

1974-ம் ஆண்டு மட்டும் அமெரிக்கப் பள்ளிகளில் 8600 கற்பழிப்புக் கொடூரங்கள் நடந்துள்ளன.

மேலும் இரண்டு லட்சத்து தொண்ணூற்று ஆருயிரம் திருட்டுகளும், ஒரு லட்சத்து எண்பத்து ஒன்பதாயிரதது முன்னூற்று முப்பத்திரண்டு அடிதடி சம்பவங்களும் பதினெருயிரத்து நூற்றிருபது வழிப்பறிக கொள்ளைகளும் ஏற்பட்டுள்ளன.

மேற்கண்டவை அனைத்தும் பள்ளிக் கட்டிடங்களுக்குள்ளேயே நடந்த சமபவங்களாகும்.

மேற்கண்ட காரணங்களுக்காகவும் அவமானச் செய்கைகளுக்காகவும் ஆசிரியர்கள் பயந்து கொண்டு அச்சத்துடனேயே தான் வேலைசெய்து வருகிருர்களாம்.

(2-ம் பத்தி தொடர்ச்சி)

ராட்சி மன்றத்தலைவரும், கட்சிக்கிளைச் செயலாளருமான தோழர் என். நடராஜனையும, மாவட்டக்குழு உறுப்பினரும் வாலிபர் சங்கத் தலைவருமான தோழர் சி. கனகராஜையும் இந்திரா காங்கிரஸ் குண்டர்கள் தாக்கியும் வெட்டியும் படுகாயப் படுத்தியது அறிந்ததே.

இத்தாக்குதலுக்கு, இம் மாவட்ட இந்திரா காங்கிரஸ் தலைவர் டிகே ஈஸ்வரபிள்ளையின் தூண்டுதலே காரணம் என்று சொல்லப்படுகிறது

# நிருபர்களிடையே பி. ஆர்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கிறது இந்திரா காங்கிரஸ் ஆட்சி. மேற்கு வங்கம், கர்னாடகம், மகாராஷ்டிரா ஆகிய மாநிலங்களில் கொள்முதலே நடப்பதில்லை.

கேள்வி: இப்போதுஏற்பட்டுள்ள பஞ்சம், பொருளாதார நெருக்கடி ஆகியவை தீர உங்கள்கட்சி என்ன திட்டம் கொடுக்கிறது?

பதில்: உணவுநெருக்கடிக்கு அரசாங்கத்தின் கொள்முதல் கொள்கையே காரணம். ஐந்து ஏக்கருக்கு உட்பட்ட நிலம் வைத்திருக்கும குடும்பங்களுக்கு கொள்முதலில் இருந்து விலக்கு அளிக்க வேண்டும. அவர்கள் தாமாகவேமுன்வந்து தானியம் கொடுத்தால் அரசாங்கம் நிர்ணயிக்கும் விலையை விட ஒருதொகையை போனசாகக்கொடுக்கலாம். 5ஏக்கர்முதல் 10 ஏக்கர் வரை நிலமுள்ளவர்களிடம் லெவி முறையிலும் 10 ஏக்கருக்கு அதிகமாக நிலம் வைத்திருப்பவர்களிடம் அவர்களது தேவைக்குபபோக மீதமுள்ள நெல்முழுவதையும் அரசாங்கம் நிர்ணயித்த விலையில் கட்டாயக் கொளமுதல் செய்ய வேண்டும். நியாய விலைக்கடைகள் மூலம் வினியோகிக்கவேண்டும்.

இந்த முறையைத்தவிர வேறு எந்த வழியிலும் உணவு தானியங்களின் விலையைக் குறைக்கவே முடியாது.

பொருளாதார நெருக்கடியைப் பொறுத்தவரை இந்த நெருக்கடிக்கு முழு முதற்காரணம் காங்கிரஸ் ஆட்சி கடந்த 28 ஆண்டுகளாக பின்பற்றி வரும் தவருன கொள்கைகள்தான். காங்கிரஸ் ஆட்சியின் பொருளாதார, தொழிற் கொள்கைகள் ஏகபோக முதலாளிகளை வளர்க்கத்தான் பயன்பட்டன. லாபம் ஒன்றை மட்டுமே குறியாகக் கொண்ட முதலாளிகள் உற்பத்தி பற்றியோ, தரம்பற்றியோ சீரான வினியோகம் பற்றியோ கவலைப் படவே இல்லை.

இந்தியப் பொருளாதார நிலைமை, தட்டுப்பாடு நிலையில்தான் உள்ளது. கிராக்கிக்கு ஏற்ற சப்ளை என்ற கொள்கை இங்கே பலனளிக்காது.

பொருளாதார நெருக்கடியை தீர்ப்பதாகக் கூறிக்கொண்டு அரசாங்கம், நிதி நிலையில் எடுக்கும் நடவடிக்கைகளும பலனளிப்பதற்குப் பதிலாக மேலும் நெருக்கடியையேஉருவாக்குகிறது.

உதாரணமாக, தொழில்களுக்கு பாங்கிகள் கடன் கொடுப்பது இறுக்கப்பட்டது. ஆனல் இதனல் சிறிய நடுத்தர தொழில்களுக்குத்தான்பாதிப்புஏற்பட்டது. ஏராளமான பேர் வேலை இழந்தார்கள்.

யாருக்குக் கடன் கொடுப்பது என்பதை முடிவு செய்யும் உரிமை அந்தந்த பாங்கி அதிகாரிகளின் விருப்பத்துக்கேதான் விடப்பட்டிருக்கிறது. பாங்கி அதிகாரிகளை எப்படி சோப்பு போடுவது என்பது ஏகபோக முதலைகளுக்குக் கைவந்த கலை. எனவே அவர்கள் எப்படியும் கடன் பெற்றுக் கொள்கிருர்கள்.

இந்த நெருக்கடி தீர ஒரே வழிதான் இருக்கிறது. பெருந்தொழில்களை எல்லாம் அரசாங்கமே ஏற்று நடத்துவதுடன், அத்தியாவசியப் பண்டங்களின் உற்பத்தி முழுவதையும் அரசாங்கமே கைப்பற்ற வேண்டும்.

## மின் வெட்டுக்கு முழுச்சம்பளம் வேண்டும்

கேள்வி: தமிழ்நாட்டில் 75 சதவீதம் மின்வெட்டு வந்திருக்கிறதே!

பதில்: காங்கிரஸ் ஆட்சியின் தவருன திட்டங்கள்தான் இந்த மின்சார வெட்டுக்குக் காரணம். இந்த மின் வெட்டினல் தொழிற்சாலைகள் மூடப்படும். 'லே-ஆப்' விடப்பட்டு இலட்சக்கணக்கான தொழிலாளர்கள் வேலை இழப்பார்கள். அவர்களுக்கு முழுச் சம்பளமும் தரப்பட வேண்டும். ஏனெனில் இந்த மின்சார வெட்டுக்கு தொழிலாளர் காரணம் அல்ல. காங்கிரஸ் ஆட்சியின் தவருன திட்டங்கள்தான் காரணம்,

## குமரி மாவட்ட மார்க்சிஸ்ட் தலைவர்கள் மீது

# ஆளும் காங்கிரஸ் குண்டர்கள் வெறித் தாக்குதலைக் கண்டித்து ஆவேச ஊர்வலம்

திருவிதாங்கோடு,ஏப். 5—

மார்க்சிஸ்ட் கட்சி தலைவர்கள்மீது இந்திராகாங்கிரஸ் குண்டர்களின் கொலை வெறித்தாக்குதலைக் கண்டித்து கடந்த 29-ந் தேதி யன்று ஆவேசமிக்க கண்டன ஊர்வலம் மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடந்தது.

அன்றுமாலையில் கட்சியின் கல்குளம் தாலுகா செயலாளர் தோழர் என். அச்சுதன் தலைமையில் நடந்த இந்த ஊர்வலத்தில் ஏராளமான பெண்களும் கலந்து கொண்டு தங்கள் கோபாவேசத்தை வெளிப்படுத்தினர்.

செட்டியார் விளை, நடுக்கடை, தெற்குவாசல்வழியே திருவிதாங்கோடு அங்கிடையில் ஊர்வலம் முடிந்த பின்பு அங்கு நடந்த கூட்டத்தில் காங்கிரசாரின் ரவுடித்தாக்குதலைக் கண்டித்து கட்சியின் மாவட்டச் செயலாளர் தோழர் பி.திவாகரன் பேசினர். இதுசம்பந்தமாக தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று திமுக அரசையும் போலீஸ் துறையையும் வற்புறுத்தினர்.

### குலசேகரத்தில்

இதே தினத்தன்று குலசேகரத்திலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, வாலிபர் சங்கம் ஆகியவற்றின் சார்பில் தோழர் வி. ராதாகிருஷ்ணன் தலைமையில் கண்டன ஊர்வலம் நடந்தது.

கடந்த 1-ந் தேதியன்று இரவு 11 மணியளவில் திருவிதாங்கோட்டில், பேரூ

(8ம் பத்தி பார்க்க)

# இணைப்புக்கட்டணம் வசூலிக்க சுற்றுப்பயணம்

அன்புமிக்க தோழர்களே,

வருகிற மே மாதத்தில் பம்பாயில் நடக்கவிருக்கும் சி. ஐ. டி. யூ. மூன்ருவது மாநாட்டையொட்டி, இணைக்கப்பட்ட சங்கங்கள் அனைத்திடமிருந்தும் இணைப்புக் கட்டணங்களை பாக்கியின்றி வசூலிக்கவும், இணைப்பு சமபந்தமான தஸ்தாவேஜுகளை பெறுவதற்கும், பின் கண்ட ஊர்களுக்கு பின் கண்ட தேதிகளில் நம் மாநில அலுவலகச் செயலாளர் தோழர் கே. வைத்தியநாதன் சுற்றுப் பயணமாக வருகிருர்.

| | | |
|---|---|---|
| திருநெல்வேலி | — | 12-4-75 |
| விருதுநகர் | — | 13-4-75 |
| திருச்சி | — | 15-4-75 |
| திருவாரூர் | — | 16-4-75 |
| நெல்லிக்குப்பம் | — | 17-4-75 |
| சென்னை | — | 18, 19-4-75 |
| வேலூர் | — | 20-4-75 |
| சேலம் | — | 21-4-75 |
| கோவை | — | 22, 23-4-75 |

மாநிலக்குழு உறுப்பினர்கள் அனைவரும், தங்கள் தங்கள் பிரதேசங்களிலுள்ள எல்லா இணைக்கப்பட்ட சங்கங்களிடமிருந்தும் கட்டண பாக்கிகளையும் தஸ்தாவேஜுகளையும் சேகரித்து அந்தந்த தேதிகளில் தோழர் வைத்தியனதனிடம் சேர்பபிக்க உதவுமாறு வேண்டுகிறே . சி ஐ டி யூ வின் மாவட்டக்குழுக்களும் இதில் உடனடி கவனம் செலுத்த வேண்டுகிறேம்.

தோழமையுள்ள,

ஏ. நல்லசிவன்

செயலாளர், சி ஐ டி யூ
தமிழ் மாநிலக் குழு

மதுரை
8-4-75

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில்(6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா